337

REG. NO. M. 2997.

RÉPUBLIQUE FRANÇAISE

LIBERTÉ.—ÉGALITÉ.—FRATERNITÉ.

தனிப்பிரதி அணா 1

ஆசிரியர் :
யாழ்ப்பாணம்
தென்கோவை.
ச. கந்தைய பிள்ளை
தமிழ்ப் பண்டிதர்,
சிலோன்.




LE RÉDACTEUR
TENKOVAI
S. CANDIAH PILLAI.
Tamil Pandit
Jaffna
*CEYLON.*

# VITTAGAM

JOURNAL HEBDOMADAIRE PARAISSANT LE JEUDI

# வித்தகம்

வியாழக்கிழமை தோறும் வெளிவருவது

Bureau de la Direction :—
RUE D'AMBALATADOU AYER
MADAM, No. 2,
Pondichéry.

நத்தம்போற் கேடு முளதாகுஞ் சாக்காடும்
வித்தகர்க் கல்லா லரிது.
குறள்.

காரியாலயம் :—
அம்பலத்தாடு ஐயர் மடத்து வீதி,
நெம்பர் 2,
புதுவை.

VOL. II. புதுவை, யுவ ௵ புரட்டாசி ௴ ௧௭ ௳ (3—10—35) NO. 45.

## தேவாரம்.

பண்டுசெய்தபழவினையின்பயன்
கண்டுங்கண்டுங்களித்திகாணெஞ்சமே
வண்டுலாமலாச்செஞ்சடையேகம்பன்
தொண்டனாய்த்திரியாய்துயர்தீரவே.

நச்சிநாளுநயந்தடியார்தொழ
விச்சையாலுமைநங்கைவழிபடக்
கொச்சையார்குறுகார்செறிதீம்பொழில்
கச்சியேகம்பமேகைதொழுமினே.

ஊனிலாவியியங்கியுலகெலாம்
தானுலாவியதன்மையராகிலும்
வானுலாவியபாணிபிறங்கவெங்
கானிலாடுவர்கச்சியேகம்பரே.

இமையாமுக்கண்ணரென்னெஞ்சத்
[துள்ளவர்
தமையாரும்மறிவொண்ணாத்தகைமை
[யர்
இமையோரேத்தவிருத்தவனேகம்பன்
நமையாளும்மவனைத்தொழுமின்களே.

மருந்தினோடுநற்சுற்றமுமக்களும்
பொருந்திநின்றெனக்காயவெம்புண்ணியன்
கருந்தடங்கண்ணினாளுமைகைதொழ
இருந்தவன்கச்சியேகம்பத்தெந்தையே.

பொருளினோடுநற்சுற்றமும்பற்றிலர்க்
கருளுநன்மைதந்தாயவரும்பொருள்
சுருள்கொள்செஞ்சடையான்கச்சியே
[கம்பம்
இருள்கெடச்சென்றுகைதொழுதேத்
[துமே.

மூக்குவாய்செவிகண்ணுடலாகிவந்
தாக்குமைவர்தமாப்பையவிழ்த்தருள்
நோக்குவானமைநோய்வினைவாராமே
காக்குநாயகன்கச்சியேகம்பனே.

பண்ணிலோசைபழத்தினிலின்சுவை
பெண்ணொடாணென்றுபேசற்கரிய
[வன்
வண்ணமில்லிவடிவுவேறாயவன்
கண்ணிலுண்மணிகச்சியேகம்பனே.

திருவினாயகன்செம்மலர்மேலயன்
வெருவநீண்டவிளங்கொளிச்சோதியான்
ஒருவனாயுணர்வாயுணர்வல்லதோர்
கருவனாயகன்கச்சியேகம்பனே.

உ
திருவருள் துணை.




காலமுண் டாகவே காதல்செய்
துய்மின் கருதரிய
ஞாலமுண் டானொடு நான்முகன்
வானவர் நண்ணரிய
ஆலமுண் டானெங்கள் பாண்டிப்
பிரான்றன் அடியவர்க்கு
மூலபண் டாரம் வழங்குகின்
றுன்வந்து முந்துமினே.

[ திருவாசகம் ]

# வித்தகம்

புதுவை
யுவ ஆூ புரட்டாசி மீ 17 உ

## சுற்றத்திற்கழகு சூழ விருத்தல்.



ஒளவையார் அருளிய "கொன்றை வேந்தன்" என்னும் வேத சூத்திரக் கொத்துள் ஒன்றாகி மிளிரும் இவ் அமுத வாக்கியம் உலகியலோடு உண்மை நிலைக்கும் ஒப்பியதாகின்றது. உண்மை நிலையாகிய பாரமார்த்திகத் துக்கு ஒப்பிய பொருள் அரிய பெரிய மறையாகி அமைந்துள்ளது. இவ் இரு வகை நிலைக்கும் ஒப்பிய பொருள் ஒரு சிறிது கூறப்படும்.

சுற்றத்திற்கு அழகு சூழ இருத்தல்— உறவினர் எனப்படுவோருக்கு அழகாவது சமீபத்தில் நெருங்கி இருத்தலாகும் என உலகியலுக்கு ஒப்பியவாறு பொருள் கூறப்படுகின்றது. சுற்று + அம் = சுற்றம் — சூழ்ந்திருப்பது — நெருங்கி இருப்பது — சமீபத்திருப்பது எனப் பொருள்படும். தம்முள் நன்மை தின்மை நடக்கும் காலங்களில் சூழ்ந்திருந்து—சமீபத்திருந்து அவற்றில் ஈடுபட்டு ஒருவருக்கொருவர் உதவி புரிபவராய் உண்டாடிக் கொண்டாடி வதியும் இயல்புடையார் உலகியலில் சுற்றம் என விதந்து கூறப்படுவர். உறவு நண்பு என்பனவும் வாய்மையில் இப் பொருளனவே ஆம். எனினும் உறவு சுற்றம் என்பன உதிரத் தொடர்புடையோர்க்கே உலக சம்பிரதாயமாக வழங்கப்படுகின்றன. மேலே கூறிய வாறு சூழ்ந்திருத்தல் வாய்மையில் கைகூடப் பெறுங்கால் உறவினர் நண்பர் அயலவர் என்போர் யாவரும் சுற்றம் எனப்படுதற்கு உரியவராவர். இப்பெற்றி அமையப் பெருதார் உதிரத் தொடர்புடையராயினும் சுற்றம் எனப் படுதற்கு வாய்மையில் உரியராகார் என்க. எவ்வாற்றுனும் வினைவசத்தால் நம்மோடு தொடர்புடையதே சுற்றம் எனப்படுவது. முன்னைப் பிறவிகளில் நம்மோடு தொடர்புடையவராய் — கடப்பாடுடையவராய் இருந்தோரும் இப் பிறவியில் உதிரத் தொடர்பு இன்றியும் நமக்குச் சுற்றமாகி அமைவர். ஆதலால் உதிரத் தொடர்பு ஒன்று பற்றியதே சுற்றம் என்பது உறவு என்பது நியதமாகாது என்க. முன்னைப் பிறவிகளில் நமக்குப் பகைவராயினரும் அப் பகைமைபற்றிய வினைப் பயனை ஊட்டும்படி இப் பிறவியில் நமக்கு உதிரத் தொடர்புடையராயும் பிறவாறும் அமைவர். விதி எனப்படும் வினைப் பயனும் நம்மைச் சூழ்ந்திருப்போர் வாயிலாகவே — சுற்றம் வாயிலாகவே நம்மை அடைவதாகும். இது பற்றியே சுற்றம் யாவும் வினை ரூபங்கள் எனப்பட்டன. நமது வினை ரூபமே நம்மைச் சூழ்வது. தன்னிலையே முன்னிலை. இது பற்றியே,

### திருவாசகம்.

தாமே தமக்குச் சுற்றமும் தாமே தமக்கு
[விதிவகையும்
யாம்ஆர் எமதுஆர் பாசமார் என்ன மாயம்;
[இவைபோகக்
கோமான் பண்டைத் தொண்டரொடு
[மவன்றன்குறிப்பேகுறிக்கொண்டு
போமாறமைமின்பொய்நீக்கிப்புயங்கனுள்
[வான்பொன்னடிக்கே.

(ஷை யாத்திரைப்பத்து செ. 3.)

என ஒன்றும் போதா அறிவிலிகளாகிய நமக்கு வற்புறுத்தியருளியது மணிவாசக சிவம். ஆதலால் இவ் வினை ரூபங்களில் விருப்பும் வெறுப்பும் இன்றி இவற்றின் இயல்பு கண்டு — நிறை கண்டு ஏற்ற ஏற்றவாறு உலகியலுக்கு ஒப்ப ஒழுகி அமைவதே சுற்றத்திற்கு — சுற்றமாகி அமைந்த நமக்கு "சூழஇருத்தல்" என்னும் அழகு என்க. சுற்றத்தை நிறை கண்டு தழுவி உபரதி பெறும் நெறியும் இதுவே ஆம். உபரதி பெறுதலே "சூழ இருத்தல்" ஆல் ஆம் பயன் என்க. இவ்வாறு ஒழுகுதலின்றிச் சுற்றத்தவர்பால் அபிமானங் கொண்டு நிறை கடந்து ஒழுகுவதும், அவரை அறவே வெறுத்து ஒருபால் ஒதுங்குவதும் உபரதி பெற்று உய்யும் திறன் ஆகா என்க.

"சுற்றத்திற்கு அழகு சூழ இருத்தல்" என்னும் மந்திரத்துக்கு உலகியலுக்கு ஒப்பியவாற்றுல் பின் வருமாறு பொருள் கூறினும் அமையும். அஃதாவது:— ஒருவன் தனது சுற்றத்திற்குச் செய்யும் சிறப்பாவது அச்சுற்றம் தன்னைச் சூழ்ந்திருக்கும்படி—தனக்கு வசியமாகும்படி ஆவன செய்து தான் நடு நாயகமாக வீற்றிருந்து வாழ்தல் என்பது. அழகு என்பது ஈண்டுச் சிறப்பு என்னும் பொருட்டு. சுற்றத்திற்கு அழகு என்புழிக் குவ் உருபு உபகாரப் பொருட்டாய் நின்றது; கரும்பிற்கு வேலி என்புழிப் போல.

இவ்வாறு உபகாரியாய்ச் சுற்றத்தால் சுற்றப்பட ஒழுகுதலே செல்வம் பெற்றதனால் ஆய பயன் என்ப.

### குறள்.

சுற்றத்தால் சுற்றப் படவொழுகல் செல் [வந்தான்
பெற்றத்தாற் பெற்ற பயன்.

(ஷை 53-ம் அதி. சுற்றந்தழால் செ. 4.)

என்பது தேவர் திருவாக்கு.

பணம் என்னும் செல்வம் பெற்றதனால் உலக வாழ்வில் ஒருவன் அடைந்த பேறுனது, தனக்குச் சுற்றம் என அமைந்தோர் தன்னைச் சூழ்ந்து தனக்கு உரியராய் ஒழுகும்படி, சாமம் தானம் என்பனவற்றால் தான் அவர்க்கு ஆவன புரிந்து ஒழுகுதலேயாம் என்பது இதன் பொருளாகும். [சாமம்—இன் சொல். தானம்—கொடை.]

### நறுந்தொகை.

"செல்வர்க் கழகு செழுங்கிளை தாங்கல்"

என்னும் நீதி வாக்கும் ஈண்டு நோக்கற்பாலது.

உலகோர் பலர் பொருளை முயன்று ஈட்டிச் சுற்றத்தார்க்கும் ஈந்து அவரைத் தமக்கு வசப்படுத்தித் தாம் அவர்க்கு நடு நாயகமாய் வீற்றிருந்து அச் சுற்றத்தைத் தம் எண்ணப்படியே நடாத்திக் கோலோச்சுவர்—கோலோச்சும்படி பகிரதப் பிரயத்தனம் பண்ணுவர். பொதுவாக சுற்றத்தவர் யாவரிடத்தும் விசேடமாக அவருட் சிலரிடத்தும் மிக்க அபிமானமுடையராய் அவர் குற்றங்களையும் பொருட்படுத்தாது பிறர் அவரைக் குறை கூறவும் இடந்தராது அவரை ஓம்புதலில் கண்ணும் கருத்துமாய் வதிவர். உலகியலுக்கு ஏற்ற செல்வமுடையவர் சுற்றத்தோடு கலந்து — அளவளாவி வாழ்வதே அச் செல்வம் புறத்துக் கழியாது பயன்படுதற்கு ஏதுவாகும் என்ப.

### குறள்.

அளவளா வில்லாதான் வாழ்க்கை குள [வளாக்
கோடின்றி நீர்நிறைந் தற்று.

(ஷை ஷை செ. 3.)

சுற்றத்தோடு கலந்து ஆவன செய்து ஒழுகாதவன் வாழ்க்கையானது குளப்பரப்பானது நீர் புறத்துப் போகாதவாறு தடுக்கும் வரம்புக்கட்டு இல்லாத வழி, அதன் கண் நீர் நிறைந்தது போலாகும் என்பது இதன் பொருளாகும். வரம்புக்கட்டு இல்லாத குளத்து நீர் புறத்துக் கழிதல் போல, சுற்றத்தவரோடு கலத்தல் இல்லாதவன் செல்வம் தாங்குவார் இன்றிக் கொன்னே கழியும் என்பது கருத்து.

### குறள்.

எதிலா ராரத் தமர் பசிப்பர் பேதை
பெருஞ் செல்வ முற்றக் கடை.

(ஷை 84-ம் அதி. பேதைமை செ. 7)

என்பதும் மேலே கூறிய பொருளை வலியுறுத்துதல் காண்க. [ஏதிலார் — பொருளுக்கு உரியராகாத பிறர். ஆர்தல் — நிறைதல் — உண்ணுதல். தமர் — சுற்றத்தார். பேதை — அறிவிலான். உற்றக்கடை — அடைந்த போது] போலியான சுற்றத்தை ஓம்புதல் உலகியலுக்கு இன்றியமையாததே ஆம். இவ்வாற்றால்,

"சுற்றத்திற்கழகு சூழ இருத்தல்"

என்னும் அமுதவாக்கின் உலகியலுக்கு ஒப்பிய பொருள் ஒருவாறு கூறப்பட்டது. தொடர்பு நீங்குதலாகிய பற்றுக்கள் அற்ற இடத்தும் பழைமை பாராட்டிக் கொண்டாட முற்பட்டு நிற்கும் சுற்றத்தார் பண்பும் பயனும் யாவரும் நன்று அறிந்தனவே ஆதலால் அவற்றை மேலும் விரித்தல் மிகையாகும். மேல் இச் சூத்திரம் உண்மை நிலைக்கு ஒப்பியவாறு நிற்றல் ஒரு சிறிது கூறி இக் கட்டுரை முடிக்கப் படும்.

போலியான சுற்றம் எனப்படுவன யாவும் நன்மை தீமை நிகழுங் காலங்களில் — ஆபத்துக் காலத்தில் தமக்கு உரியராக வேண்டும் என்றே — தமது போலியான சாதிப் பெருமைக்குப் பங்கம் வரக்கூடாது என்னும் அபிமானம் பற்றியே அச் சுற்றத்தைத் தழுவுதலில் கண்ணும் கருத்துமாய் இருக்கின்றனர் உலகோர் பலர். உலகியலில் சுற்றம் தழுவுதல் — உண்டாட்டுக் கொண்டாட்டம் என்பன யாவும் சுயநலம் கருதிய ஒருவகை வியாபாரமேயன்றிக் கருணை பற்றிய செயல் என்பது வெறும் வார்த்தையே ஆகும். சுற்றம் எனப்படுவோர் தமக்கு வசியமாகாவிட்டால் — தமது நலம் கருதியே — தமது எண்ணப்படியே ஒழுகாவிட்டால் அச் சுற்றத்தாருக்கு உதவி புரிதல்—உண்டாட்டுக் கொண்டாட்டங்கள் எல்லாவற்றையும் உலகோர் பலர் நிறுத்தி விடுவர். பகையும் பூசலும் சர்ச்சைகளும் கொண்டாட்டம் காரணமாகச் சண்டைகளும் பெரும்பாலும் உளவாகும். இது காரணமாக உளவாகும் இன்னல்கள் இடையூறுகள் துன்பங்கள் அளவிட முடியாதனவாகும். சுற்றத் தொடர்பு பற்றிய நன்மை தீமைகள் எல்லாம் கர்மத் தொடர்பு பற்றியனவே — பாசத் தொடர்பு பற்றியனவே ஆம். உலகத்திலே உறவினர் எனவும் சுற்றத்தார் எனவும் தழுவி நிற்பவர் எல்லாம் மண், பெண், பொன் என்னும் மூவகைத் தொடர்பு பற்றியவரேயன்றி இயல்பாகவே மனம் ஒருப்பட்டுக் கருணை பற்றி நிற்பவரல்லர் என்பது உலக நிகழ்ச்சிகளால் வெள்ளிடை ஆம். ஆதலால் சுற்றம் காரணமான அபிமானச் செயல் எல்லாம் அவ நெறிக்கே ஆளாக்கும் என்பது ஒருதலை.

### சிவானந்தபோதம்.

பெண்ணாலும்பொன்னாலும்பூமியாலும்
பெருக்கவேயிச்சைகொண்டொன்றோ [டொன்று
திண்ணகவுறவாடிச்செத்தாரல்லால்
சேர்ந்துமனமொன்றகிச்சிறந்திட்டரோ

கண்ணாலேபார்த்துநீசுகங்கண்டாயே
கவலைக்கேயாளாகிக்கருத்திழந்து
புண்ணாகிப்பிறப்பிறப்பிற்புகுந்திட்டாய்நீ
பூமலர்த்தாள்துணையென்றுபுகழ்வாய்
[நெஞ்சே.

மண், பொன், பெண் என்னும் தொடர்பு நீங்குங்கால் சுற்றம் எனப்பட்டோர் சூழ்ந்து நில்லாது ஒருபால் ஒதுங்கி நிற்றல் கண் கூடு. உறவினர் முதலிய தொடர்புடையோரை யாம் ஓம்பாவிடின் அவர்கள் கெதி யின்றி வருந்துவார்கள் என அவதியுற்று அழிவதும் நமது பாசத் தொடர்பே யன்றி வேறல்ல. அவரவர் வினைவழியே அவ்வவ் வினைப்போகங்களை வினைவடிவாய் நிற்கும் தெய்வம் ஊட்டாது விடுதல் இல்லை. கருவில் அமைந்த வினைப்போகம் அநுபவமாய் வந்து கழிதல் ஒருதலை. ஆதலால் சுற்றம் என்பவர் பால் யாம் கவலை யுறுவது எமது மனப்பான்மைபற்றிய செயலேயன்றி வேறன்று. இவ் உண்மையை அறியாது வருந்துவோர் சடிதியில் இறந்துவிட்டால் ஆவது என்னை? இவர் கவலைப்பாடு என் செய்யும்?

## சிவானந்தபோதம்.

அவரெல்லாமிருக்கஇப்போதுன்னைஎமன்
அழைத்துவிடிலியாதுசெய்வர்யழகு
[நெஞ்சே
இவரெல்லாம்பிழைக்கும்வகைதிரும்பி
[வந்தே
எதுவாய்முடிப்பதுண்டோஎண்ணிப்பாரு
தவறிநீகடம்விட்டுப்போகும்போது
தாங்கூடமாண்டாரோபிழைப்பில்லாமல்
அவரவர்க்குச்சிவன்றுணையென்றெண்ணி
[டாமல்
ஐயத்தாலிப்படிநீ அலைவுற்றாயே.

## ஔவையார்.

கருப்பைக்குள்முட்டைக்குங்கல்லினுட்
[டேரைக்கும்
விருப்புற்றமுதளிக்குமெய்யன்—உருப்
[பெற்றால்
ஊட்டிவளர்க்கானோஓகெடுவாய்அன்னாய்
[கேள்
வாட்டமுனக்கேன்மகிழ்.

என்னும் ஆன்றோர் வாக்கும் ஈண்டு நோக்கற்பாலது. இதனை ஔவையார் அருளியது என்பர். இவ்வாற்றால் உலகியலாகிய சுற்றம் என்பது பாசத் தொடர்பாகியநமது மனப்பான்மையே என்பதும் அதன்பால் பற்று வைத்து அபிமானம் கொண்டு அவதியுறாது — விருப்பும் வெறுப்பும் இன்றி நிறையோடு ஒழுகி உபரதி பெறுதலே உய்யும் திறன் என்பதும் நன்று புலப்படுதல் கண்டு கொள்க. சுய நலம் கருதிச் சூழும் போலிச் சுற்றம் அந்நலத்துக்குப் பங்கம் வந்துழிப் பிரிந்துவிடும். அன்றியும் அது துன்பம் தருவதும் நிலையற்றதும் ஆம். ஆதலால் உலகியலாய் அமைந்த போலிச் சுற்றத்தில் உதாசீனமாய் ஒழுகி வாய்மையான சுற்றத்தைக் கண்டு அதனால் சூழப்பட்டு உய்தி பெறுதலே சிறந்த அறத்தாறு என்க. இஃதன்றி வேறு தடம் புகுந்து உய்தி பெறுதல் முயற்கொம்பே ஆகும். நமது சரீரமே — பொறி புலன்களே — தத்துவக் கூட்டமே உரிய சாதகங்களால் அழகு பெற்று — விமல மடைந்து நம்மைச் சூழ்ந்து பிரியாது இருப்பன ஆகும். இவ்வாறு விமல மடைந்து சூழ இருத்தலே — தம்மோடு அந்நியோன்னிய சம்பந்தமுடைய உணர்ச்சி வடிவாகிய உயிருக்கு இடமாகி அதனைப் பிரியாது இருப்பதே வாய்மையான சுற்றத்துக்கு அழகு என்க.

"சுற்றத்திற் கழகு சூழ இருத்தல்"

என்னும் அமுத வாக்கின் உண்மை நிலைக்கு ஒப்பிய பொருள் இதுவே ஆம். தன்னிலைச் சுற்றமும் வினை ரூபமே ஆம். இச் சுற்றம் குருவருளால் பெறப்படும் உரிய சாதகங்களால் சுத்த மடைதலே அழகுபெறுதலாகும். தேக சீவ சொரூபம் இருவினை சொரூபமே யாம். தன்னிலையாகிய இவ்வினை சொரூபம் மாற்றமடையவே முன்னிலையும் மாற்றமடையும். இதனால் சீவத்துவம் சிவத்துவமாகும். வினைரூபமே சுற்றம் என்பதும் அது மாற்றமடைதலே உய்யுந் திறன் என்பதும் பின்வரும் திருவாக்குக்களாலும் நன்று புலப்படும்.

## திருவாசகம்.

கயன்மாண்டகண்ணிதன்பங்கனெனைக்
[கலந்தாண்டலுமே
அயன்மாண்டருவினைச்சுற்றமுமாண்டவனி
[யின்மேல்
மயன்மாண்டுமற்றுள்ளவாசகமாண்டென்
[னுடைய
செயன்மாண்டவாபாடித்தெள்ளேணங்
[கொட்டாமோ.

(ஷை திருத்தெள்ளேணம் செ. 11.)

["வினைச் சுற்றம் மாண்டு" என்பது வினை ரூபமாகிய பொறி புலன்கள் கெட்டுத் திரிதலை உணர்த்தி நின்றது. என்னுடைய செயல்—சீவச் செயல்.]

## திருவாசகம்.

"தாமேதமக்குச்சுற்றமும்தாமேதமக்கு
[விதிவகையும்"

என்பதும் வினை ரூபமாகிய சரீரமே — பொறி புலன்களே சுற்றம் என்பதனை நன்று வலியுறுத்துகின்றது.

## கல்லாடம்.

"ஐம்புலக்கேளிருய்ஒருவாய்ப்புக்கென"

(மெலிவு கண்டு செவிலி கூறல் என்னும் துறை) என்பதும் பொறி புலன்களைச் சுற்றம் எனக் கூறியது காண்க.

இம் மந்திரத்தின் உண்மை நிலைக்கு ஒப்பிய பொருள் பின் வருமாறு கூறப்படினும் அமையும். அஃதாவது:— முத்தி நெறிக் கெனச் சமைந்தான் ஒருவன் தனது சரீரமாய் அமைந்த பொறி புலன் முதலிய சுற்றத்துக்குச் செய்யும் அழகாவது அவை தன்னை விட்டுப் பிரியாது வசியப் பட்டுத் தனக்கு இடமாகித் தன்னைச் சூழ்ந்திருக்கும்படி உரிய சாதகங்களால் அவற்றை விமலமாக்கி — அமலமாக்கித் தான் நித்தியத்துவம் பெறுதலே ஆம் என்பது. உடலும் உயிரும் இடமும் பொருளுமாய் அருள் வடிவான சத்தியும் சிவமுமாய் நித்தியத்துவம்

பெறும் என்னும் வேத உண்மை இதுவே ஆம். சித்தாகிய உயிர் அமல மடைந்து சிவமாகும்போது அதனோடு அந்நியோந்நிய சம்பந்தமுடையதாய் அதனைப் பிரியாத சத்தாகிய உடலமும் அருள் வடிவான சத்தியாய்ச் சிவாங்கமாதலே இயற்கை முறை ஆகும். பின் வரும் பிரபல சுருதியும் தத்துவக் கூட்டறவினலாய நமது சரீரமே அமலமடைந்து அருள் வடிவாய் — வாய்மையான சுற்றமாய் முத்தி முதலாகும் — வீடாகும் என்பதனை நன்று வலியுறுத்துதல் கண்டு கொள்க.

### திருமந்திரம்.

சித்தர் சிவலோக மிங்கே தெரிசித்தோர்
சத்தமுஞ் சத்த முடிபுந்தம் முட்கொண் [டோர்
சித்தர் நிமலர் நிராமயர் நீள்பர
முத்தர் தம்முத்தி முதல்முப்பத் தாறே.

(ஷை 1-ம் தந். உபதேசம் செ. 13.)

"தம் முத்தி முதல் முப்பத்தாறே" என்பது முப்பத்தாறு தத்துவக் கூட்டறவினலாய சரீரமே மாற்றமடைந்து — அமல மடைந்து அருள் வடிவாய் வீடாகும் என்பதனை உணர்த்தி நின்றது. முதல் இடம் வீடு என்பன ஒன்றே. உடல் விமல மடையாது பிணவியல் அடையுமாயின் தத்துவக் கூட்டமாகிய சுற்றம் சூழ இருக்கப் பெறுதல் அமையாது பிரிந்துவிடும். அதனால் பிறவி நெறியே உளதாகும். இவ் உண்மையையே உணர்த்த எழுந்தது பின் வரும் திருவாக்கு என அறிதல் வேண்டும்.

### திருமந்திரம்.

முப்பது முப்பது முப்பத் தறுவரும்
செப்ப மதிளுடைக் கோயிலுள் வாழ்பவர்
செப்ப மதிளுடைக் கோயில் சிதைந்தபின்
ஒப்ப அனைவரும் ஓட்டெடுத் தாரே.

(ஷை யாக்கை நிலையாமை செ. 12.)

நமது சரிரமாகிய கோவிலுள் வாழும் இவரே நமக்கு உரியராய் நம்மை சூழும் சுற்றமாவர். இவ் உண்மை இது வரை "வித்தக" வாயிலாக வெளி வந்த கட்டுரைகள் பலவற்றால் நன்று விளக்கி நிறுவப்பட்டதாதலின் ஈண்டும் விரித்தல் மிகையாகும். ஆங்காங்குக் கண்டு தெளிக.

உலகியலுக்கு ஏற்ற பணம் என்னும் செல்வம் உடையார் அதனல் சுற்றத்தவரை ஓம்பி அவரால் சூழப்பட்டுத் தாம் நடு நாயகமாய் வீற்றிருத்தல் போலவே, செல்வத்துட் செல்வமாகிய அருட் செல்வம் பெற்ற மெய்யடியாரும் அதனல் பொறி புலன்களாகிய — தத்துவக் கூட்டறவாகிய— சரீரமாகிய சுற்றத்தை வசப்படுத்தி— மாற்றி — அருள் வடிவாக்கி அவை தம்மைச் சூழ — அவ் அருள் வடிவே — அருளே தமக்கு இடமாகத் தாம் நித்தியத்துவம் பெறுபவராவர். அருட் செல்வம் பெற்றதனல் ஆய பயன் இதுவே என்க. இவ்வாற்றால்,

### குறள்.

சுற்றத்தாற் சுற்றப் படஒழுகல் செல்வந் [தான்
பெற்றத்தாற் பெற்ற பயன்.

(ஷை 83 ம் தந். சுற்றந்தழால் செ. 4.)

என்னும் தேவர் வாக்கு உண்மை நிலைக்கு ஒப்பியவாறு நிற்றல் கண்டு கொள்க.

### திருவாசகம்.

……… அவயவஞ் சுவைதரு
கோற்றேன் கொண்டு செய்தனன்
…………………………
அருட்பெருந் தீயின் அடியோம் அடிக்குடில்
ஒருத்தரும் வழாமை ஒடுக்கினன்
…………………………
என்னையும் இருப்ப தாக்கினன் என்னிற்
கருணை வான்தேன் கலக்க
அருளொடு பராவமு தாக்கினன்
…………………………

(ஷை திருவண்டப்பகுதி)

என்பன காண்க.

"செல்வர்க் கழகு செழுங் கிளை தாங்கல்"

என்பதும் இவ்வாறே உண்மை நிலைக்கும் ஒப்பியதாகின்றது. உலகியலில் சுற்றத்தோடு அளவளாவி ஒழுகாதவன் செல்வ வாழ்க்கை பயனுடையதாகாது. அவன் செல்வம் தாங்குவாரின்மையால் புறத்துக் கழியும். இது போலவே "என்பரமல்லா இன் அருள்" (திருவாசகம்) எனப் பட்ட ஆதி அருளை ஒருவன் பெற்றுழி அவ் அருளானது உடலகத்துள்ள அன்போடு — பொறி புலன்களாகிய சுற்றத்தோடு கலந்து பெற வேண்டிய நிறைவை அடைய வேண்டும். அஞ்ஞான்று அச் சுற்றமாகிய அவயவம் — உறுப்பு — பொறி புலன் என்னும் தத்துவக் கூட்டங்கள் — சரீரம் அவ் அருளால் பயனடைந்து அருண் மயமாகி அவனைப் பிரியாது — சிவமாந்தன்மை எய்திய சீவனைப் பிரியாது சூழ்தலால் — இடமாதலால் நித்தியத்துவம் அடையும். இவ்வாறு அன்போடு — பொறி புலன் முதலிய சுற்றத்தோடு அளவளாவுதல் — நிறை பெறுதல் கைகூடாத இடத்து உடல் அமல மடைந்து முத்தி முதலாதல் முடியாத காரியம். ஞானகாச வடிவாகிய—ஆதி அருளாகிய அகரம் தூல சத்தியாகிய இகரத்தோடு சேர்ந்து ஐ என மலராது — சைவம் திகழாது என்க. சகர மெய் இகரத்தைத் தழுவாது வியாபகத்துக்கு ஆதியாகிய அகரத்தைத் தழுவுதலால் அவ் அருட் செல்வம் புறத்துக் கழியும். இதனல் சவ நெறியே — மரணமே — பிறவி நெறியே உளதாகும் என்க.

### குறள்.

அளவளா வில்லாதான் வாழ்க்கை குள [வளாக்
கோடின்றி நீர் நிறைந் தற்று.

என்பதன் உண்மை நிலைக்கு ஒப்பிய பொருள் இதுவே ஆம். [அளவளாவுதல் — பொறி புலன்களை நிறை தழுவி நிற்கும்படி செய்தல்.]

## கொன்றை வேந்தன்.

"சுற்றம்பார்க்கிற்சுற்றம்இல்லை"

என்றனள் ஔவை. உலகில் அறிவுடையோர் என்பவர் சுற்றம் என்னும் உறவினர்பால் குற்றங்களையே—குறைகளையே கண்டு அவரைப் புறக்கணியாது சுய நலம் கருதி ஆவன செய்து அவரை வசியப்படுத்தி நன்மை தீமைகளில் — சுபா சுப கருமங்களில் தம்மைச் சூழ்ந்து இருக்கும்படி செய்து கொள்வர். இவ்வாறே உண்மை நிலைபிலும் நமக்கு வாய்மையில் சுற்றம் என அமைந்த சரீரம் பொறி புலன் என்பன வற்றில் குற்றம் கண்டு அவற்றை அலட்சியம் செய்து துன்புறாது, அவற்றில் உள்ள குற்றம் என்னும் குறையை நிறைவுபடுத்தி நம்மைப் பிரியாது சூழும்படி அவற்றை வசப்படுத்துவதே—விமலமாக்குவதே—காய சித்தி பெறுவதே உய்யும் திறனாகும். இவ்வாறின்றி, அவற்றை அலட்சியம் செய்தால் நமக்கு வாய்மையான சுற்றம் இல்லையாகும். நம்மைத் தாங்குவோர் இல்லையாகும். அறம் மறமாகும். முத்தி முதல் கெடும். குற்றத்தை குணமாக்குவதே — குறைவை நிறைவு படுத்துவதே செயற் கருஞ் செயலாகும் — ஆண்மைச் செயலாகும். அன்றி, சுற்றமாகி நமக்கு அமைந்தவைகளைப் புறக்கணிப்பது எளிய செயலேயாகும் — பேதைமையாகும்— பேடித் தன்மையாகும். பொறி புலன்களே— சரீரமே —தத்துவக் கூட்டமே — சுற்றமே — ஞான மயமாக — அருள் வடிவாக வாய்மையான சுற்றமாக மாற்றமடைய வேண்டும். வேறு தடம் இல்லை. வியாபகமாகிய தன்னிலை முன்னிலையே — பிரபஞ்சமே — உடலுயிரே — உலகமே சிவமயமாக—பிரமமாக மாற்றமடைய வேண்டும். இதுவே வேத உண்மையும் தத்துவப் பெரியார் துணிபும் ஆம். இஃதன்றி வேறு தடம் — முத்தி முதல் உண்டு என்பது பித்தன் கூற்று. திருவாசகத் திருவண்டப்பகுதி அகவலைத் திருவருட் சகாயத்தால் ஆராயப் பெறுவார்க்கு இவ்வுண்மை அங்கை ஆமலகம் ஆம். பின் வரும் பிரமாணங்களும் பொறி புலன்களாகிய—தத்துவக் கூட்டமாகிய சுற்றமே அழிந்தொழியாது ஞானமயமாக — அருள் மயமாக மாற்ற மடைய வேண்டும் — அடைந்து நம்மைச் சூழ வேண்டும் என்பதனை நன்று வலியுறுத்துவன ஆகும்,

### திருவாசகம்.

பொய்யாயின எல்லாம் போயகல வந்தருளி
மெய்ஞ்ஞானமாகிமிளிர்கின்ற மெய்ச்
[சுடரே.

(ஷ சிவபுராணம்)

[இதனால் தத்துவக் கூட்டறவாகிய சரீரம் — பொறி புலன் மலக்குற்றம் நீங்கி விமலமாகி — ஞான மயமாகி மாறப் பெறுதல் கூறப்பட்டது.]

மாறிநின்றென்னைமயக்கிடும்வஞ்சப்
புலனைந்தின்வழியடைத்துஅமுதே
ஊறிநின்றென்னுள்எழுபரஞ்சோதி..."

(ஷ கோயிற்றிருப்பதிகம் செ. 1.)

### அப்பர் தேவாரம்.

".........நமைஆளுடையான்புலன்
மாற்றினன்......................."

(ஷ திருவாவடுதுறை திருக்குறுந்தொகை செ. 7.)

### திருமந்திரம்.

உள்ளம்பெருங்கோயில்ஊனுடம்பாலயம்
வள்ளற்பிரானர்க்குவாய்கோபுரவாசல்
தெள்ளத்தெளிந்தார்க்குச்சீவன்சிவலிங்கம்
கள்ளப்புலனைந்தும்காளாமணிவிளக்கே.

(ஷ 7-ம் தந். சிவபூசை செ. 1.)

இவற்றால் பொறி புலன்களே அழிந்தொழியாது ஞான மயமாக மாற்றம் அடைவனவாகும் என்பது வெள்ளிடை மலையாம். இவ்வாறு வருவன பல. எடுத்துக் காட்டின் மிகப் பராக்கும். ஆதலால் கருவி கரணங்களாகிய — தத்துவக் கூட்டறவாகிய அசுத்த மாயா காரியங்களையே நிறை முறையோடு ஓம்பி — விமலமாக்கி — அமலமாக்கி வாய்மையான சுற்றமாக்கி நம்மைச் சூழும்படி—நமக்கு இடமாகும்படி — முத்தி முதலாகும்படி செய்து "இருக்க" வேண்டும்—நித்தியத்துவம் பெற வேண்டும் என அறிதற்பாற்று. புருஷார்த்தங்களை — வீடு பேற்றை அடைய வேண்டிய பக்குவ சீவன் குருவருளால் செய்ய வேண்டிய சாதகம் இதுவே என்க. சுற்றம் தன்னைப் பிரியாது சூழத் தான் இருத்தற்கு ஏற்றவாறு அச் சுற்றத்துக்குச் செய்யும் அழகு இதுவே என்க. இவ்வாறு சூழ இருத்தலே சுற்றத்திற்கும் அழகாயிற்று என்க.

### சுத்த சாதகம்.

'அருள்வடிவதுவும் சிவாங்கிசனுமாய்
[அமர்ந்து"

நிற்பதே நம்மால் அழகு செய்யப்பட்டு நம்மைப் பிரியாது சூழ்ந்த சுற்றமும் நாமும் அடையும் பயன் என்க. இவ்வாற்றால்,

"சுற்றத்திற்கழகு சூழ இருத்தல்"

என்பதன் உண்மை நிலைக்கு ஒப்பிய பொருள் கண்டு கொள்க.மேலும் விரிப்பிற் பெருகும்.

இதுகாறும் கூறியவைகளால் "சுற்றத்திற்கழகு சூழ இருத்தல்" என்னும் ஔவையார் அமுத வாக்கின் உலகியலுக்கும் உண்மை நிலைக்கும் ஒப்பிய பொருள் ஒருவாறு உணரத்தகும்.

சுபம்.

# உடலுயிர்ச் சம்பந்தம்.

(தொகுதி 2. 43-ம் வாரத் தொடர்ச்சி.)

### திருமந்திரம்.

*அன்ன மிரண்டுள வாற்றங் கரையினில்*
*துன்னி யிரண்டுந் துணைப்பிரி யாதன்னம்*
*தன்னிலை யன்னந் தனியொன்ற தென்றக்* [கால்
*பின்ன மடவன்னம் பேறணு காதே.*

(ஷை 7-ம் தந்.. பசுவிலக்கணம் பிராணன் செ. 2.)

[அன்னம் இரண்டில் ஒன்று உயிர். மற்றொன்று வித்தாக இருக்கும் ஆசான். வினை வேற்றப்பட்ட விடத்து இவ் ஆசான் முன்னிலையிற்பொலியும்.]

இச் சீவனுக்குத் தூலத்துள்ளதாகிய அழுக்கு (திரை, மறைப்பு) எத்தனை மாத்திரை அளவு நிறை அனந்தலடைய மேண்டுமோ—விலக வேண்டுமோ அத்தனை மாத்திரை அளவு எண் கொண்ட பயில்வு பயின்றால் அவ் அசுத்த நிறை அனந்தலடைந்து அத் தூலம் அமல மடையும். இத்தகைய பயில்வுகளின் எண் இத்தனை எனக் காட்டுவதே ஆகமம் என்பது. ஆகமம்—சங்கியை. இவ் எண் கொண்ட பயில்வு முன்னிலை ஆசானுக்கே யன்றி ஏனையோருக்குத் திவிலை எனினும் புலப்படாது. இஃது வேறு அத்தியாயமாக மிக விரித்துக் கூறப்படும். இக்காலத்தில் தான் அல்லாமலும் தனக்கு வேறுபடாமலும் வித்தாக விளங்கும் ஆசான் பூரணத் தூய்மையடைய ஆசைப்பட்டு வேறு எங்கிருந்தோ வந்தது போலத் தோன்றி — முன்னிலையில் தனி சீவனாகத் தோன்றி மானிட வடிவாய்த் தோன்றி அளபடை பெறும். இவர் தாம் வேதங்கள் ஓல மிடும் இடத்திலிருந்து விசிரும்பித்து முன்னிலை பெற்று வந்தவர் — ஆரியம் என்னும் வட திக்கிலிருந்து வந்தவர். இவரைத் தான் மணிவாசகர் அற்புதப்பத்தில் “மெய்யனாய் வெளிகாட்டி முன் நின்றதோர் அற்புதம் விளம்பேனே” (திருவாசகம் அற்புதப்பத்து 1) என்று போற்றியருளினர். பழைய ஆசான் உபதேசப்படி வழுவின்றி ஒழுகிய மணிவாசகரது தூலத்துள்ளே ஒலித்துக் கொண்டிருந்த வேதங்கள் மூலாதாரம் முதல் ஆறு அங்கங்களையும் அணிபற்றி ஏறிச் சாமகானம் விளைத்து ஆரோகணமாக எழுப்பி அவரோகணமாக இறக்கி தூங்கல் துள்ளல் மெலிந்து நினறெழுதல் என்னும் இன்னோரன்ன முறைகளால் கிரமப்படி இசை மீட்டி மீட்டி அளாவ, அளாவிய அவ் அளவு அளபடை பெற்று ஆசனாய்ப் பொலிந்தது என்க. இவ்வாறாக மணிவாசகருக்கு ஆசான் இருவரோ எனின், இருவர் என்பதே உத்தரம். முதல் ஆசான் பெருந்துறையில் தோன்றிய அப்பன் — சித்து மூர்த்தி. இவரே மணிவாசகருக்கு முத்திரையையும் ஆறு அங்கங்களின் இரகசியங்களையும் கிரமமாக உபதேசித்து “உன்னைப் பிரியேன்” என்று அருளி மறைந்தவர். “பெரியோன் ஒருவன் கண்டு கொள் என்றுன் பெய்கழலிணை காட்டிப் பிரி என்றென் றருளிய வருளும்பொய்யோ எங்கள் பெருமானே.” (திருவாசகம் எண்ணப் பதிகம் 2) என்பதனாலும் இவ் உண்மை அறியப்படும். இவர் மணிவாசகர் பெருந்துறைக்குப் போதற்கு முன்னேயே (சில வருடங்களுக்கு முன்னாகவே) பள்ளிக்கூடம் வைத்து வித்தியாப்பியாசம் செய்வித்தனர் என்பது ஐதீகம். இவர் விதிகளை வழுவறத்தாங்கி ஒழுகிய மணிவாசகர் பலகாலம் வினைப்பயனாகிய முன்னிலைக் கோரணிகளையும் அநுபவித்து, தன்னிலையில் வித்தாயிருந்த ஆசான் என்னும் வித்து எத்தகைய பக்குவமடைந்து முன்னிலையில் தோன்ற முடியுமோ அத்தகைய பக்குவம் பொலிந்து சாம கானத்தால் அடைந்தவுடன் “மெய்யனாய்” “வேந்தனாய்” “வெளிகாட்டி முன் நின்றதோர் அற்புதம் விளம்பேனே” என்பதற்கு இணங்க, முன்னிலையில் குருவாய்ப் போந்து விதிக்க வேண்டியனவற்றை விதித்து ஆளாக்கி யருளினர். வேதம் ஆகமம் முதலியன வெல்லாம் தத்துவங்களே யன்றி வேறல்ல. இது பற்றியே உண்மையான வேதம் முதலியவற்றை உணர்ந்தோர் தத்துவப் பெரியார் எனப்பட்டனர். இவற்றால் தன்னிலையே முன்னிலை — முன்னிலையே வியாபகம் என்பது நன்கு புலப்படும். தூலம் அமல மடைந்து சூக்குமமாதல் எவ்வாறு? இதனை யார் அறிவார்? யாருக்கு யார் சொல்லுவார்? இதனாற்றான், அதுவானால் அது ஆவர் அதுவே சொல்லும் என்பர் பெரியார். இது தான் பிரம வித்தை. மற்றையவித்தைகளைக் கஷ்டப்பட்டுக் கற்றுக் கொள்ளலாம். “ஸயன்ஸு”கள் மூலமாக விளக்கலாம். பிரம வித்தையைக் கற்றுக் கொள்ளுதல் அரிது அரிது. கற்றால் கற்றவனே அதனை அறிவான். யாவற்றையும் ஆக்கவும் அழிக்கவும் வல்லதும் யாவற்றுக்கும் காரணமுமாகிய ஆயுதமே திறவு கோல் — துறவு கோல். திறவு கோல் இல்லாமல் பேழை வாய் திறத்தல் முடியாது — மறைக் காட்டுக் கதவம் திறத்தல் முடியாது. இத்துணைப்பெரிய மகத்துவம் வாய்ந்த — மாண்பு மிகுந்த ஆயுதத்தின் அருமை பெருமையை என்னென்று கூறுவது? தமிழ் இலக்கணத்தின் அருமை பெருமையை என்னென்று இயம்புவது?

(தொடரும்)

# உண்மை முத்திநிலை ஆராய்ச்சி மறுப்பு.

"வித்தக"ப் பத்திராசிரியர் எழுதியது.

(தொகுதி 2. 39-ம் வாரத் தொடர்ச்சி.)

"..............................................................
சாணும் வளர்க்க அடியேன்படுந்துயர் சற்றல்லவே"

"சாணும் வளர்க்க" என்பது அரிய பெரிய வேத ரகஸியம். தூலத்தில் விளங்கும் சாண்வட்ட குண்டம், ஓம குண்டம், வைகுண்டம், பாத்திரம், யாகசாலை, பாகசாலை முதலிய பல திருநாமங்கள் பெற்ற பாத்திரத்தில் அப்பாத்திரமறிந்து பிச்சையிட்டு அஃதாவது அப்பாத்திரத்தில் வளர்ந்து எழுகின்ற தேயுவுக்கு — வைசுவாநரன் என்னும் சிவாக்கினிக்கு ஏற்ற ஆகுதி கொடுத்து அத்தூலத்தை அமலமாக விளைவுறச் செய்ய வேண்டும் என்பதனை உணர்த்தி நின்றது. நம்மவரெல்லாம் பஞ்ச தன்மாத்திரைக் கூட்டுறவினால் உண்டாகிய தமது தூலத்தில் இன்ன இன்ன பௌதிக நிறை இவ்வளவு இவ்வளவு குறைவு படுகின்றன எனவும் மிகையாய் இருக்கின்றன எனவும் உணர்ந்து அவ்வவற்றைக் கூட்டியும் குறைத்தும் சமப் படுத்துதற்கு ஏற்ற உணவு வர்க்கங்களைத் தேடி அருந்தி மாற்றிப் பிறந்து அவாவை ஒழித்து நித்தியராக அறியாமல், பல பிறப்புக்களுக்கு வித்தாய் விளங்கும் அவாவினால் கண்டவற்றை எல்லாம் — இச்சைப்பட்டவற்றை யெல்லாம் நிறையறியாது உண்டு அதனால் அவ் யாகாக்கினி அசுத்த மடைய அத் தூலத்தில் விளங்கும் சுத்த அணுக்களை ஒவ்வொன்றாகக் கெடுத்துக் காலத்தில் கொலை பாதகம் என்னும் உணர்ச்சியில்லாமலே சாதலை எதிர்பார்த்த பாவிகளாய் இருக்கின்றனர். முன்னிலைகளை நிறை கண்டு பஞ்சீகரணித்தலாகிய அருந்தல் பொருந்தல் அமையப் பெறாது "துற்றவை துறந்த வெற்றுயிர் ஆக்கை"யராய் வாயோடு கண் மூடி மயக்கமுற்று ஓராங்கு வீற்றிருக்கும் சவிகற்ப நிர்விகற்ப நிட்டையாளராகிய உபாசக நிட்டையாளரும் இன்ன நீரரே என்பது சொல்லாமலே அமையும். இத் தற்கொலையை நிவிர்த்தி செய்து சுகம் பெற அறியாத நாம் பிற உயிர்களுக்கு இரங்கும் சீவகாருண்ணியம் உடையோம் என்பது அறியாமை அல்லவா? இதுபற்றியன்றோ நமது குருநாதரும் எல்லோருக்கும் பெரியவரும் அப்பருமாகிய நாவுக்கரசு.

அப்பர் தேவாரம்.

"பூந்துருத்திபூந்துருத்திஎன்பீராகில்
பொல்லாதபுலாற்றுருத்திபோக்கலாமே."

எனவும்,

சாத்திரம்பலபேசுஞ்சழக்கர்காள்
கோத்திரமுங்குலமுங்கொண்டென்செய்வீர்
பாத்திரஞ்சிவமென்றுபணிதிரேல்
மாத்திரைக்குள்அருளுமாற்பேறரே.

(ஷை திருமாற்பேறு திருக்குறுந்தொகை செ. 2.)

எனவும் இவ் அரிய உண்மை பொதிந்த திருவாக்குக்கு இப்பேயுலகத்தில் உமிழ்ந்தார். உமிழ்ந்தும் என்னை? இதனைக் கொள்வார் யாரும் இல்லையே! பிற்காலச் சைவருள்ளும் தற்காலச் சைவருள்ளும் பெரும்பாலார் "சரீரம் அழிந்துவிடும்! அது பொய்யே! அதனைப் பொருட்பண்ணக் கூடாது! சரீரம் பிணமாகிக் கழிந்த பின் உயிர் அதனைப் பிரிந்து எவ்விதமான கஷ்டமும் இன்றி (பாணிப்பணூட்டு முதலிய இனிய சிற்றுண்டிகளை மழ மழ என்று சப்பி விழுங்கிச் சுவைத்துக் களிப்பது போல) மிகச் சுலபமாகக் கடவுளோடு அத்துவிதமாய்க் கலந்துவிடும்." என்று உழறிக் குழறி "உற்ற ஆக்கையின் உறுபொருள்" (திருவாசகம் அதிசயப்பத்து செ. 9) ஆகிய எம் பெருமான் திருவடியை அடையும் நெறி அறியாது — முத்தி நெறி அறியாது, "பூந்துருத்தி" என்று கூறும்படி அஃதாவது சவ மணம் கமழும் இப் புலால் துருத்தியைச் சிவ மணம் கமழும் பூந்துருத்தியாக மாற்ற வேண்டும் என்று அருளப்பட்ட திருவாக்குக்கு எதிர் மறையாகவே பிரசாரணம் செய்து கொண்டு தமது இன்மையைப் பிறர் அறியா வண்ணம் சில நடை நொடிகளால் மறைத்து, "பெற்றவா பெற்ற பயனது நுகர்ந்திடும் பித்தர்" (ஷை) ஆகி, தமது தூலங்களாகிய பெருஞ் சாத்துக்களைக் 'கள்ளக் குழியில்" புதைக்கப்படவும், கட்டைமேல் சுடப்படவும், பிணமாக விடுத்துச் சாதலடைந்தனர்; அடைகின்றனர். "பூந்துருத்தி என்பீராகில்" என்பதற்கு இப்புலால் துருத்தியாகிய மருளுடம்பைப் பூந்துருத்தியாக்க வேண்டும் — விமலமாய் அமலமடையச் செய்ய வேண்டும் என்னும் உண்மைப் பொருளே — அப்பொருளுக்கு ஏற்ற உணர்ச்சியுமே பல காலமாகவே பலர்க்கும் மறை பொருளாய் விட்டன என்றால், மற்றவைகளைப் பற்றிப் பேசுவது என்னை? இவ்வாறு வரும் பிரமாணங்கள் பலவாகும். அவற்றைத் தத்துவப் பெரியார் பாடல்களுள் கண்டு தெளிக.

(தொடரும்)

Imprimerie "VITTAGAM" — Pondichéry. Le Directeur-Gérant. R. Nagarattinam.